# திருப்புகழமிர்தம்



ஆசிரியர்

## கிருபானந்தவாரி

சௌமிய | பங்குனி

வயலி நகரியி லருள் பெற் மயில் மிசை
யுதவு பரிமள மதுகர வெகுவித
வனச மலரடி கனவிலு நனவிலு மறவேனே.

## சந்தா நேயர்களுக்கு

எந்தை கந்தவேள் திருவருள் துணைகொண்டு நடந்துவரும் நமது திருப்புகழமிர்த இதழுக்கு இந்தப் பங்குனி மாத இதழோடு முப்பத்து நான்கு ஆண்டுகள் நிறைவு பெறுகின்றன. அடுத்துவரும் சாதாரண சித்திரை முதல் தொடங்கும் முப்பத்தைந்தாவது ஆண்டுக்குரிய சந்தாத் தொகையை உடனே அனுப்பிவைப்பது நல்லது. 10-4-70க்குள் எமக்கு வந்து சேருமாறு சந்தாத் தொகையை அனுப்பி வைத்தால் சித்திரை மாத இதழைக் காலத்தில் அனுப்பிவைக்க வசதியாக இருக்கும். பின்னர் சேரும் விலாசங்களுக்கு சித்திரை மாத இதழ் வைகாசி மாத இதழுடன் சேர்ந்தே வரும்.

சந்தாத் தொகையை அனுப்பிவைக்கும் பொழுது, யார் பெயரையும் மணியார்டர் பாரத்தில் எழுதக்கூடாது. "மானேஜர் திருப்புகழமிர்தம்", என்றே விலாசமிட்டு அனுப்பி வைக்கவேண்டும்.

நேரில் செலுத்த வசதியுள்ளவர்கள் தவிர மற்றவர்கள் மணியார்டர் மூலமே சந்தாத் தொகையை அனுப்பிவைக்கவேண்டும். போஸ்டல் ஆர்டர்கள், செக்குகள் அனுப்பக்கூடாது.

வசதிப்படும் சந்தாதாரர்கள் மட்டும் பின் குறிப்பிட்டுள்ள விலாசங்களில் 10-4-70 வரை நேரில் செலுத்தி ரசீது பெற்றுக் கொள்ளலாம்.

1. திரு. ஜெ. மு. சாமி, ஜவுளிக் கடை, 145, கீழ மாசி வீதி, மதுரை.
2. திரு. ரா. ப. சாமிக்கண்ணு பிள்ளை அவர்கள், செட்டிபேட்டைத்தெரு, உறையூர், திருச்சி-5.
3. திரு. ஆ. பொன்னுசாமி பிள்ளை அவர்கள், மரக்கடை, மேலப்புலிவார் ரோடு, திருச்சி-8.
4. திரு. வீ. சங்கரன் பிள்ளை, 66. சொக்கலிங்கம் சந்து, திருநெல்வேலி டவுன்.
5. திரு. D. வீரப்ப முதலியார் அவர்கள், ஜோதிலக்ஷ்மி விலாஸ், 53, தெற்கு வீதி, சிதம்பரம்.
6. திரு. வே. கு. ராமசாமி முதலியார் சன்ஸ், மளிகை. லாங்கு பஜார், வேலூர், N. A.
7. திரு. வீ. திருஞானசம்பந்த முதலியார் அவர்கள், 32-A மண்டபத் தெரு, காஞ்சிபுரம்.
8. திரு. அரு. லெ. வெ. நடராஜன் செட்டியார் அவர்கள், பாங்கர், ராஜவீதி, கோயம்புத்தூர்.
9. திரு. O. M. S. S. சங்கரலிங்க நாடார் சன்ஸ் & கோ., வியாபாரம், 371, மெயின் பஜார், விருதுநகர்.
10. Dr. K. L. ஹநுமந்தன், M. B., B. S., 8, தெற்கு மாசி வீதி, மதுரை.

திருப்புகழமிர்தம் காரியாலயம், 89, சிங்கண்ண செட்டித் தெரு,
சிந்தாதிரிப்பேட்டை, சென்னை-2.

உ

ஓம் குஹாய நம :





# திருப்புகழமிர்தம்

"குருப்புகழை மேவுகின்ற கொற்றவன் ருள்போற்றுந்
திருப்புகழைக் கேளீர் தினம்"

## மலர் 34

சௌமிய ஞூ சித்திரை மீ முதல் பங்குனி மீ வரையில்
(1969 ஏப்ரல் மீ முதல் 1970 மார்ச்சு மீ வரையில்



திருப்புகழ்த் தொண்டன்

## கிருபானந்தவாரி



திருப்புகழமிர்தம் காரியாலயம்

89, சிங்கண்ண செட்டித் தெரு,

சிந்தாதிரிப்பேட்டை .: சென்னை - 2.

1 9 7 0

முருகா.

# திருப்புகழமிர்தம்

---

## பொருளடக்கம்

## திருப்புகழ்

(பதவுரை, பொழிப்புரை, விரிவுரை, கருத்துரையுடன்)

## திருவருணை

## கற்பு—சிறுகதைகள்



## மகாபாரதம்—சாந்தி பருவம்

### ஆபத் தருமம்



### மோக்ஷ தர்மம்



## பிற கட்டுரைகள்

**Statement about ownership and other particulars about The newspaper "THIRUPPUGAL AMIRTHAM" Madras. as required to be published under Section 19D Sub-Section (b) of the Press and Registration of Books Act.**

(Form IV See Rule 8)

| | | |
|---|---|---|
| 1. | Place of publication | Madras |
| 2. | Periodicity of its publication : | Monthly |
| 3. | Printer's Name :<br>Nationality<br>Address : | K. M. John<br>Indian<br>Jeevan Press,<br>8, Titarappa Mudali Street,<br>Triplicane, Madras-5. |
| 4. | Publisher's Name :<br>Nationality :<br>Address : | Sri M. Madhusoodana Sivam<br>Indian<br>89, Singanna Chetti Street,<br>Chintadripet, Madras-2. |
| 5. | Editor's Name :<br>Nationality :<br>Address : | Sri Kirupanandavari,<br>Indian<br>89, Singanna Chetti Street,<br>Chintadripet, Madras-2. |
| 6. | Name and Address of individuals who own the newspaper and partners or shareholders holding more than one percent of the total capital. | M. Madhusoodana Sivam,<br>89, Singanna Chetti Street,<br>Chintadripet, Madras-2 |

I, M. Madhusoodana Sivam, hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

Dated :
15th March 1970

(Sd) M. MADHUSOODANA SIVAM,
Publisher.

உ

ஓம் குஹாய நம :



# திருப்புகழமிர்தம்



"குருப்புகழை மேவுகின்ற கொற்றவன் ருள்போற்றுந்
திருப்புகழைக் கேளீர் தினம்"



| மலர் 34 | சௌமிய ஹூ—பங்குனிமீ மார்ச்சு 1970 | இதழ் 12 |
|---|---|---|



## திருவருணை

## திருப்புகழ்

உலையிலன லொத்த வுடலினனல் பற்றி
யுடுபதியை முட்டி யமுதூற
லுருகிவர விட்ட பரமசுக முற்று
வுனதடியை நத்தி நினையாமற்
சிலைநுதலி லிட்ட திலதமவிர் பொட்டு
திகழ்முகவர் முத்து நகையாலே
சிலுகுவலை யிட்ட மயல்கவலை பட்டு
திருடனென வெட்கி யலைவேனே
கலைகனக வட்ட திமிலைபறை கொட்ட
கனகமயில் விட்ட கதிர்வேலா
கருதலரின் முட்டி கருகிவரு துட்ட
கதவமண ருற்ற குலகாலா
அலைகடலு டுத்த தலமதனில் வெற்றி
அருணைவளர் வெற்பி லுறைவோனே
அரசுரர்களை வெட்டி யமரர்சிறை விட்டு
அரசுநிலை யிட்ட பெருமாளே.

## பதவுரை

*கலை* = சாத்திர முறைப்படி வாசிக்கப்படுவதும், கனக - பொன் மயமாக விளங்குவதும், வட்ட = வட்ட வடிவுடையதுமான, திமிலை = திமிலையென்ற தோற்கருவி, பறை கொட்ட = பறைபோல் ஒலிக்க, கனக மயில் விட்ட = பொன் மயிலைச் செலுத்திய, கதிர்வேலா = ஒளி மிகுந்த வேலாயுதரே! கருதலரின் முட்டி - பகைவர்கள் போல் எதிர்த்துத் தாக்கி, கருகி வரும் = கரிய நிறத்துடன் வந்த, துஷ்ட = கொடியவர்களும், கதம் = சினங்கொண்டவருமான, அமணர் உற்றகுல காலா = சமணருடைய குலத்தைக் காலன்போல் அழித்தவரே! அலைகடல் உடுத்த - அலைகள் வீசும் கடலை யாடையாக வுடுத்த, தலம் அதனில் = பூமியில், வெற்றி அருணை வளர் = வெற்றித் தலமாம் திருவருணையில் வளர்ந்துள்ள, வெற்பில் உறைவோனே = மலையில் வீற்றிருப்பவரே! அசுரர்களை வெட்டி = சூராதியவுணர்களைத் துணி செய்து, அமரர் சிறை விட்டு = தேவர்களைச் சிறையினின்றும் விடுவித்து, அரசு நிலை இட்ட = தேவலோக ராஜ்யத்தை ஒரு நிலையில்வைத்து அருளிய, பெருமாளே = பெருமையிற் சிறந்தவரே! உலையில் அனல் ஒத்த = உலைக்களத்தில் உள்ள நெருப்புப்போல், உடலில் அனல் பற்றி = உடம்பில் சிவாக்கினி பற்றி மேல் எழுந்து, உடுபதியை முட்டி = சந்திர மண்டலத்தை முட்டி, அமுது ஊறல் உருகி வரவிட்ட = அங்கு அமுதின் ஊற்று உருகிப் பெருகி வரவிடுகின்ற, பரம சுகம் உற்று = பெரிய சுகத்தை யடைந்து, உனது அடியை நத்தி நினையாமல் = உமது திருவடியை விரும்பி நினையாமல், சிலை நுதலில் இட்ட = வில்லைப்போல் வளைந்த நெற்றியிலிட்ட, திலதம் அவிர் பொட்டு திகழ் = திலகம் எனத் திகழும் பொட்டு விளங்கும், முகவர் = முகத்தையுடைய மாதர்களின், முத்து நகையாலே = முத்தனைய புன்சிரிப்பினால், சிலுகு வலை இட்ட = துன்ப வலையில் சேர்ப்பித்த, மயல் கவலை பட்டு = காமப் பித்தால் கவலைப்பட்டு, திருடன் என வெட்கி = திருடன் என்று பலர் பழிக்க நாணப்பட்டு, அலைவேனோ = அடியேன் அலையலாமோ?

## பொழிப்புரை

இசை நூலின் முறைப்படி வாசிக்கப்படுவதும், பொன் தகடுகளால் அலங்கரிக்கப்பட்டதும், வட்ட வடிவாக விளங்குவதுமான, திமிலை யென்ற தோற் கருவி பறைபோல் ஒலிக்க, பொன் மயமான மயிலைச் செலுத்திய ஒளி மிகுந்த வேலாயுதரே! பகைவர்கள் போல் எதிர்த்துத் தாக்கி, கரிய நிறத்துடன் வந்த துஷ்டர்களும், சினங்கொண்டவர்களுமான சமணர்களுடைய குலத்தைக் காலனைப் போல் அழித்தவரே! அலை வீசும் கடலையாடையாக வுடுத்த இப்பூதலத்தில் வெற்றித் தலமாக விளங்கும் திருவண்ணுமலையில் ஓங்கி நிற்கும் மலை

யில் எழுந்தருளியிருப்பவரே! அசுரர்களை அழித்து, அமரர்களின் சிறையை நீக்கித் தேவலோக அரசை நிலைநிறுத்திய பெருமிதமுடையவரே! உலைக்களத்தின் நெருப்புபோல் உடலில் சிவாக்கினி மூண்டு எழுந்து, சந்திர மண்டலத்தை முட்டி, அந்த அமுத தாரையின் ஊற்று பெருகிவர, பரமசுகத்தையடைந்து, தேவரீருடைய திருவடியை விரும்பி நினையாமல், வில்லைப் போல் வளைந்த நெற்றியிலிட்ட திலதம்போல் திகழும் பொட்டுடன் விளங்கும் முகத்தையுடையவர்களின் முத்துப் போன்ற புன்னகையாலே துன்ப வலையில் வீழ்ந்து மயக்கத்தினால் கவலையடைந்து திருடன் என்று பலர் இகழ, நாணப்பட்டு அடியேன் அலையலாமோ?

## விரிவுரை

**உலையிலன லொத்த உடலினனல்பற்றி :—**

உடம்பில் உள்ள மூலாக்கினியை, உள்முகமாகப் பிராண வாயுவைச் செலுத்தும் யோக சாதனையால் சுடர்விட்டு மூளுமாறு செய்தல் வேண்டும். அங்ஙனம் செய்தால் அந்த மூலக்கனல் கொல்லனுடைய உலைக் களத்தில் நெருப்பு சுடர்விட்டு எரிவதுபோல் மூண்டு எழும்.

"நாளுமதிவேக கால்கொண்டு தீமண்ட
வாசியனலூடு போயொன்றி"
—(மூளும்வினை) திருப்புகழ்.

**உடுபதியை முட்டி அமுதூறல் உருகிவர :—**

உடுபதி – சந்திரன் யோக சாதனையால் எழுந்த மூலத் தீ மூண்டு சந்திர மண்டலத்தைத் தாக்கி வெதுப்பும் அதனால் மதிமண்டலத்துள்ள அமுத தாரை உருகிப் பெருகி ஊற்றெடுத்து வெளிப்படும். அந்த அமுத தாரையை யுண்டு, சிவயோகிகள் காலத்தை வென்று சிலைபோல் நிலைபெற்றிருப்பார்கள்.

"........வானின்கண்
நாமமதி மீதி லூறுங்கலா இன்ப அமுதூறல்
நாடியதன்மீது போய்நின்ற ஆனந்த
மேலைவெளி யேறி நீயின்றி நானின்றி
நாடியினும் வேறு தானின்றி வாழ்கின்ற தொருநாளே"
—(மூளும்வினை) திருப்புகழ்.

**பரமசுகமுற்று :—**

சிவயோகத்தின் முடிவில் சோமரசமுண்டு நான் அற்றுத் தானாகி நிற்கும் நிலையில் உண்டாகும். சுகம் எல்லாச் சுகங்கட்கும் மேலான பரமசுகம் என உணர்க.

இருவினைமு மலமுமற இறவியொடு பிறவியற
ஏகபோகமாய் நீயுநானுமாய்
இறுகும்வகை பரமசுகம் அதனையருள்''
—(அறுகுநுனி) திருப்புகழ்.

தண்ணமுத மதிகுளிர்ந்த கிரணம் வீசத்
தடம்பொழில்பூ மணம்வீசத் தென்றல்வீச
எண்ணமுத பளிக்குநிலா முற்றத்தே இன்
னிசைவீசத் தண்பனிநீர் எடுத்துவீசப்
பெண்ணமுத மனையவர் விண்ணமுதம் ஊட்டப்
பெறுகின்ற சுகமனைத்தும் பிற்பட்டோடக்
கண்ணமுதத் துடம்புயிர்மற்றனைத்தும் இன்பங்
கலந்துகொளத் தருங்கருணைக் கடவுள்தேவே.
—திருவருட்பா

உனதடியை நத்தி :—

சிவயோகத்தில் சலனமற நின்று தற்போதமின்றி முருகன் திருவடியை விரும்பி, அலையில்லாத கடல்போல் இருத்தல் வேண்டும். இத்தகைய சுகநிலையை நினையாமல் மக்கள் கீழான சிறிய இன்பத்தை விரும்பி அலைகின்றாகள்.

சிலை நுதலில்......... மயல் கவலைபட்டு :—

பொட்டணிந்து, புன்னகை புரிந்து மையல் வலைவீசும் மாதர் ஆசை வலையில் அகப்பட்டு அதனால் மயக்கமுற்று பெருங்கவலைப்படுதல் கூடாது.

திருடனென வெட்கியலைவேனோ :—

உலகத்தார் "இவன் திருடன்" என்று இகழுமாறு அடியேன் அலைதல் கூடாது என்று சுவாமிகள் முருகனிடம் விண்ணபபம் புரிகின்றார்.

கனக மயில்விட்ட கதிர்வேலா :—

பொன்மயில்—பிரணவம்.

கதிர்வேல—ஞானம்.

ஓங்காரத்தின் நடுவில் ஞானவொளியாய் நிற்கும் பரம் பொருள் முருகன்.

அமணருற்ற குலகாலா :—

திருஞான சம்பந்தரை யதிட்டித்து அக்காலத்துப் பிணக்கமுற்ற அமண தலத்தை முருகன் கருவறுத்தருளினார்.

**அலைகடலுடுத்த தலமதனில் :—**

கடல் சூழ்ந்த பூமியில்; அன்றி தலம் என்ற சொல்லுக்கு சேஷத்திரம் எனப் பொருள் கொண்டால் அலைவீசும் திருச்செந்தூர் என்று பொருள்படும்.

திருச்செந்தூரிலும் திருவண்ணுமலையிலும் வீற்றிருப்பவனே என்று கூறுகின்ருர்.

**அரசு நிலையிட்ட பெருமாளே :—**

சூராதி யவுணர்களை அழித்து, அமரர்களின் சிறையை மீட்டு, முன்போல் இந்திரவுலகில் இந்திரன் அறநெறியுடன் அரசு புரிய முருகன் கருணை புரிந்தான்.

### கருத்துரை

அருணை மேவும் அண்ணலே! மாதர் வலைப் படாது சிவ யோக நிலையில் பரம சுகம்பெற அருள்செய்.

## திருப்புகழ்

கடல்பரவு தரங்க மீதெழு திங்களாலே
கருதிமிக மடந்தை மார்சொல்வ தந்தியாலே
வடவனலை முனிந்து வீசிய தென்றலாலே
வயலருணையில் வஞ்சி போதந லங்கலாமோ

இடமுமையை மணந்த நாதரி றைஞ்சும்வீரா
எழுகிரிகள் பிளந்து வீழஎ றிந்தவேலா
அடலசுரர் கலங்கி யோடமு னிந்தகோவே
அரிபிரம புரந்த ராதியர் தம்பிரானே.

### பதவுரை

இடம் உமையைமணந்த நாதர் = இடப் பாகத்தில் உமாதேவியை சேர்த்துக் கொண்ட சிவபெருமான், இறைஞ்சும் வீரா = வணங்குகின்ற வீரரே! எழுகிரிகள் பிளந்து வீழ = ஏழு மலைகளும் பிளந்து வீழும்படி, எறிந்த வேலா = எறிந்த வேலாயுதரே! அடல் அசுரர் கலங்கி ஓட = வலிமை மிக்க அசுரர்கள் கலங்கி ஓடுமாறு, முனிந்த கோவே = சீறிய தலைவரே! அரி பிரமபுரந்தர ஆதியர் = திருமால் பிரமன் இந்திரன் முதலிய இமையவர்கட்கு, தம்பிரானே = தனிப் பெருந் தலைவரே! கடல் பரவு = கடலில் பரந்து வரும், தரங்கம் மீது எழும் = அலைகளின் மீது தோன்றி வருகின்ற, திங்களாலே = சந்திரனாலும், மிக கருதி = மிகவும் நினைத்து, மடந்தைமார் சொல் = பெண்கள்

தமக்குள் பேசிக் கொள்ளும், வதந்தியாலே = ஊர்ப் பேச்சாலும், வட அனலை முனிந்து வீசிய = வடவைத் தீயை கோபித்து வீசுகின்ற, தென்றலாலே = தென்றல் காற்றினாலும், வயல் அருணையில் = வயல்கள் சூழ்ந்த திருவண்ணாமலையில், வஞ்சி போதம் = கொடி போன்ற இந்தப் பெண்ணின் அறிவு, நலங்கலாமோ = கலங்கி வருந்தலாமோ?

## பொழிப்புரை

உமாதேவியை இடப்புறத்தில் வைத்து அருளிய சிவ பெருமான் வணங்குகின்ற வீரமூர்த்தியே! ஏழு மலைகளும் பிளந்து விழும்படி எறிந்த வேலாயுதரே! வலிமையில் மிகுந்த அசுரர்கள் கலங்கி ஓடுமாறு சினந்த தலைவரே! அரியயன் இந்திரன் முதலிய அமரர்கட்குத் தனிப்பெருந் தலைவரே! கடலில் பரந்துவரும் அலைகளின் மீது தோன்றி வருகின்ற சந்திரனாலும், நினைத்து நினைத்துப் பெண்கள் தமக்குள் பேசுகின்ற ஊர்வசைச் சொற்களாலும், வடவைத் தீயைக் கோபித்து வீசுகின்ற தென்றல் காற்றினாலும், வயல்கள் சூழ்ந்த திருவண்ணாமலையில் கொடிபோன்ற இப்பெண்ணின் அறிவு கலங்கலாமோ ?

## விரிவுரை

இத்திருப்புகழ் அகப்பொருள் துறையில் அமைந்தது.

**கடல்பரவு தரங்கமீதெழு திங்களாலே :—**

குளிர்ந்த கடலின் அலைமீது தோன்றி தண்ணமுதம் போன்ற கிரணங்களைப் பொழிகின்ற சந்திரனுடைய நிலவு தலைவனை விரும்பித் தனித்துள்ள நாயகிக்கு வெப்பத்தைச் செய்து வெதுப்பும்.

"வாரிமீதேயெழு திங்களாலே" —திருப்புகழ்

**கருதிமிக மடந்தைமார் சொல் வதந்தியாலே :—**

ஊரில் உள்ள பெண்கள் தமக்குள் காதல் நோயால் கலங்குகின்ற கன்னியைப் பற்றிப் பலப்பல விதமாக உரையாடுவார்கள்.

"தெருவினில் நடவா மடவார்
திரண்டொறுக்கும் வசையாலே" —திருப்புகழ்.

**வடவனலைமுனிந்து வீசிய தென்றலாலே :—**

மிகக் கொடிய வடவைத் தீயையும் கோபித்து, அதனினுங் கொடுமையாகத் தென்றல் வீசுமாப் .

எல்லோருக்கும் இனிதாக இருக்குந் தென்றல் பிரிவுத் துயரால் பெரிதும் வருந்துவோர்க்குப் பெருந்துயரத்தை விளை விக்கும்.

**வயலருணையில் வஞ்சிபோத நலங்கலாமோ :—**

"திருவண்ணுமலையில் வாழும் இப்பெண்ணின் அறிவு உம்மையடையாமல் கலங்குவது முறையோ ?"

அருணகிரியார், தன்னை நாயகியாக வைத்து, முருகனை நாயகனுகக் கொண்டு இவ்வண்ணம் இயம்புகின்ருர்.

"தீதுற்றேயெழு திங்களாலே
தீயைத்தூவிய தென்றலாலே
போதுற்ருடும நங்கனுலே
போதப்பேதை நலங்கலாமோ?"

—திருப்புகழ்.

**இடமுமையை மணந்தநாதர் :—**

பிருங்கி முனிவர் உமையம்மையை விடுத்து சிவத்தை மட்டும் வலம் வந்த காரணத்தால், எம்பிராட்டி திருவண்ணு மலையில் தவஞ்செய்து இடப்பாகம் பெற்ருர்.

"இமயத்துமயிற் கொருபக்கமளித்
தவருக்கிசையப் புகல்வோனே"

—(அமைவுற்) திருப்புகழ்.

"அங்கம் யாவும்நம் பொருட்டுவிட் டிமயவெற்படைந்தாய்
இங்கு நாம்உனக் கிடப்புறம் அளிப்பதே இயற்கை
மங்கையேநம திடப்புறத் துறையென; மகிழ்வுற்
றங்கையால் அணைத் தருளினன் உருகியொன்ருனர்.

அடுத்த செஞ்சடை ஒருபுறம்; ஒருபுறம் அளகம்
தொடுத்த கொன்றையோர்புறம்; ஒருபுறம்நறுந் தொடையல்
வடித்த சூலமோர் புறம்; ஒருபுறம் மலர்க்குவளை
திடத்தி லார்கழல் ஒருபுறம்; ஒருபுறம் சிலம்பு.

பச்சை வன்னமற் றெருபுறம்; ஒருபுறம் பவளம்
கச்சுலாமுலை யொருபுறம்; ஒருபுறம் கவின்மார்;
அச்சம்நீக்கிய வரதமொன்று; அபயமொன்றங்கை;
இச்சையா மிவர் உறுதல்கண் டிறைஞ்சினர் இமையோர்.

—அருணுசலபுராணம், இடப்பாகம் பெற்ற சருக்கம்.

**எழுகிரிகள் பிளந்துவீழ எறிந்த வேலா :—**

முருகவேள் சூரபன்மனுடன் போர் புரிந்தபோது, அசுரர் கள் மாய வலிமையால் அவனுக்க அரணுக ஏழுமலைகளாகி

நின்று அவனைக் காத்தனர். அப்போது முருகன் அந்த ஏழு மலைகளைப் பிளந்து அழித்தருளினார்.

"சூர்பதைக்கர வுட்கி நெளித்துய
ராழியி ரைப்பநிரைக்குடலைக் கழு
சூழநரிக்கெரு டக்கொடி பற்பல சங்கமாகச்
சூழ்கிரியைக் கைதடித்து மலைத்திகை
யானை யுழற்றி நடுக்கிமதப் பொறி
சோர நகைத் தயிலைக் கொடுவிட்டருள்
செங்கைவேலா"
—(வார்குழலை) திருப்புகழ்.

அரிபிரம புரந்தராதியர் தம்பிரானே :—

முருகப் பெருமான் மூவர்க்குந் தேவர்க்கும் மூழுமுதற் கடவுள்.

முருகனுக்குமேல் ஒரு பொருள் இல்லை. சுக்குக்கு மிஞ்சிய மருந்தில்லை சுப்பிரமணியருக்கு மிஞ்சிய தெய்வமில்லை" என்பது பழமொழி;

"எந்தக்கடவுளும் என்கோள்போழ்
கந்தக்கடவுளை மிஞ்சாதே"

என்பார் பாம்பனடிகள்.

"படைத்தளித் தழிக்குந் த்ரிமூர்த்திகள்
தம்பிரானே"
(—கனைத்ததிர்க்கும்) திருப்புகழ்.

"அரியரபிரம புரந்தராதியர் தம்பிரானே"
—(கரியுரி) திருப்புகழ்.

"வகைவகை புகழ்ந்துவாசவன்
அரி பிரமர் சந்த்ர சூரியர்
வழிபடுதல் கண்டு வாழ்வருள் பெருமாளே"
—(கடினதட) திருப்புகழ்.

கருத்துரை

மூவர் போற்றும் முருகவேளே! அருணையில் வாழும் பெண்ணாகிய என்னை மருவி யருள்புரிவாய்.

முருகா

# கற்பு

## சாலம்மா

அன்று தை வெள்ளிக்கிழமை; சாலம்மாள் கைகால் முகங்களை யலம்பி, திருவெண்ணீறும், குங்குமமுந் தரித்துக்கொண்டாள்; சிறு பிரம்புக் கூடையில் பழம், தேங்காய், வெற்றிலைப் பாக்கு, சூடம், ஊதுபத்தி, நெய் இவைகளை எடுத்துக் கொண்டாள். தன் அருமந்தச் செல்வக்குமாரி, மணிமொழியை அழைத்துக் கொண்டு முருகன் கோயிலுக்குப் புறப்பட்டாள். அவ்வாறு செல்லும்போது கந்தரநுபூதி என்ற மந்திர நூலைப் பாராயணஞ் செய்து கொண்டே இடப் புறம் ஓரமாக நடந்தாள்.

மணிமொழி கடைகளையும் வழியோரத்தில் உள்ள வேடிக்கை களையும் பார்த்துக்கொண்டே போனாள். சாலம்மா திருக்கோயிலை யடைந்து, கொடிமரத்தின் அருகில் ஐந்து அங்கங்கள் நிலத்தில் தோயப் பணிந்து எழுந்தாள். அங்குள்ள விளக்கில் நெய்யைவிட்டு, ஆலயத்தை வலமாக வந்தாள். முருகனுடைய அருட்பெருங் கருணையை எண்ணுந் தோறும் அவளுடைய உள்ளம் உருகியது, கண்ணீர் பெருகியது. வினை கருகியது.

சுற்றுப் பிரகாரத்தில் அமர்ந்துள்ள ஏழைகளாகிய கூன் குருடு முடம் முதலிய அங்கப் பழுதானவர்கட்கு சில்லரைக் காசுகளை யீந் தாள். "தெய்வமே! இவர்கள் முற்பிறப்பில் என்ன பாவஞ் செய்தார் களோ? உழைத்து உண்ண முடியாதவர்களாய் பசிக்கும் குளிருக்கும் வாடி வருந்துகின்றார்கள். இவர்களின் துயரம் போக அருள் செய்" என்று வேண்டிக் கொண்டாள்.

சந்நிதிக்குச் சென்றாள். அங்கு முருகனுக்கு அபிஷேகமாகி அலங் காரஞ் செய்துகொண்டிருந்தார்கள். சாலம்மா ஒருபுறம் தன் புதல்வியுடன் அமர்ந்தாள். அவள் உள்ளம் சடக்கரமந்திரத்தை ஓதிக் கொண்டிருந்தது.

மணிமொழி ‘ அம்மா! நேரமாகின்றது. சுவாமி கும்பிட்டுவிட்டு வீட்டுக்குப் போகலாம்: வா" என்றாள்.

"மகளே! ஒரு பெரிய மனிதர்களையே காலமல்லாத காலத்தில் பார்ப்பது நல்லதல்ல; உரிய காலத்தில்தான் பார்க்கவேண்டும்; அப் படிப் பார்த்தால்தான் பயன் விளையும்; அவருடைய கருணையைப்

பெறலாம்'' என்று அறிஞர்கள் எண்ணுகின்றார்களே. அப்படியிருக்க அகிலாண்டகோடி பிரம்மாண்ட நாயகரான ஆண்டவனை உரிய காலத்தில்தானே சேவிக்க வேண்டும். கைமாற்றுக் கடன் கேட்கப் போகின்றவர்கள் தனவந்தரிடம் சமயம் பார்த்து, அவர் மகிழ்ச்சியாக இருக்கும் போதுதானே தங்கள் கருத்தை மெல்லச் சொல்லுகின்றார்கள். வீட்டில்தான் 24 மணி நேரமும் அடைபட்டுக் கிடக்கின்றோமே. கோயிலில் சிறிது நேரம் இருந்தால் என்ன குறைநேரும் கோயில் புனிதமான இடம். இங்கே பல மகான்கள் திருவடி தோய்ந்திருக்கும். நமது கட்புலனுக்குத் தெரியாத பல சித்தர்கள் உலாவுவார்கள். குழந்தாய் கோயிலில் மநோலயம் உண்டாகும். மயானத்துக்குச் சென்றால் மனதில் ஒருவிதமான தளர்ச்சி மரை கழன்றது போல் உண்டாவது இயல்பு. மயானமே மனிதனை மாற்றுமானால், தெய்வ சாந்நித்யம் உள்ள கோயில் மனித உள்ளத்தை மாற்றும் என்பதில் என்ன சந்தேகம்? "மாலறநேயம் மலிந்தவர் வேடமும் ஆலயந் தானும் அரன் எனத் தொழுமே'' என்று சிவஞானபோதம் உபதேசிக்கின்றது. ஆலய வழிபாடு உயிரை உயர்த்துகின்றது. ஓட்டலில் உடம்புக்கு உணவு கிடைக்கின்றது. கோயிலில் உயிருக்கு உணர்வு கிடைக்கின்றது. இறைவனைப் பலமுறை நேருக்கு நேரே கண்ட திருஞானசம்பந்தரும், திருநாவுக்கரசரும், சுந்தரமூர்த்தி நாயனாரும், மாணிக்கவாசகரும், அருணகிரியாரும் ஆலயந்தோறும் சென்று வந்தித்து வழிபட்டார்கள் என்றால், நமக்கு ஆலய வழிபாடு எத்துணை அவசியம் என நினைந்து பார். முத்தி நெறியின் கடைசிப் படியில் நின்ற அவர்களே கோயில் வழிபாடு செய்தார்களாயின், முத்தி நெறியின் முதற்படியில் கூடக் கால் வைக்காத நாம் கோயில் வழிபாடு பய பக்தியுடன் செய்ய வேண்டாமா?

இறைவன் எங்கும் இருப்பினும் கோயிலில் விளங்கித் தோன்றுகின்றான். மின்சாரக் கம்பி முழுவதும் மின்சாரம் பரவியிருந்தாலும், மின்சாரப் 'பல்ப்'பில் வெளிப்படுவதுபோல், எங்கும் பரந்து நிறைந்துள்ள இறைவனுடைய திருவருள் ஆலயத்திலுள்ள திருவுருவத்தில் வெளிப்பட்டு அருள் புரிகின்றது.

சமயம் பார்த்துத்தான் இறைவனைத் தொழவேண்டும். திருமால் திருக்கயிலாயஞ் சென்று சமயத்தைப் பார்த்து வெகுநேரம் காத்திருந்தார் என்று பெரிய புராணம் கூறுகின்றது.

> "காதில்வெண் குழையோன் கழல்தொழ நெடியோன்
> காலம்பார்த் திருந்தது மறியான்''

அம்மா! குழந்தாய் என் அநுபவத்தில் நடந்த ஒரு நிகழ்ச்சியைக் கூறுகின்றேன் கேள்.

சமயம் பார்த்து தன் தலைவனிடம் தன்னுடைய குறையைக் கூறி நிறைவு பெறவேண்டும்.

நம்மவூரில் ஒரு கிழவியிருந்தாள். அவளுக்கு ஒரே மகன். அவன் மக்குப்பிண்டம். அறிவுக்கும் அவனுக்கும் ஆயிரம் மைல். அவனுக்குப் படிப்பு ஏறவில்லை. வெறுந்தடியனுகத் திரிந்தான். அவன் தாய்க்கு மிகவும் வருத்தம். அக்கிழவி புல்லறுத்தும், சுமைதூக்கியும் குடும்பத்தை நடாத்தினுள். "ஏண்டா நீ தடிமாடு மாதிரி திரிகின்றனேயே. உனக்கு வெட்கமாக இல்லையா? ஏதாவது வேலை செய்யக்கூடாதா?" என்று வைதாள். அவன் அதைப் பற்றிக் கவலையே படவில்லை. தாயிடம் சிறிது சமையல் வேலை பயின்றான்.

கிழவி அவனை அழைத்து வந்து உன் அப்பாவிடம் விடுத்து "முதலாளீ! இவன் உதவாக்கரையாக இருக்கின்றான். சமையல் வேலை தெரியும். இவனுக்கு வேலை கொடுத்து என்னைக் காப்பாற்றும்" என்றாள்.

உன் தந்தை சிந்தை இரங்கி அவனை சமையல் வேலைக்கு வைத்துக் கொண்டார். அவனுடைய அசட்டுத்தனம் அளவிட முடியாது. ஒரு நாளைக்கு அன்னத்தைக் களியாகச் செய்து வைப்பான். ஒரு நாளைக்கு வேகாத அரிசியாக வைப்பான். ஒரு நாள் குழம்பு ரசமாக வைப்பான். ரசம் குழம்பாக இருக்கும். அவனுடைய சமையலைப் பொறி புலன்களை வென்ற ஞானிகள்தான் சாப்பிட வேண்டும். உன் தந்தை பொறுமையே வடிவானவர். அவன் செய்யும் குற்றங்களை யெல்லாம் பொறுத்துக் கொள்ளுவார். அவனிடம் ஒரு குணம் சிறந்திருந்தது. திருடத் தெரியாது.

ஒரு நாள் காலை வெண்பொங்கலுக்கு கடுகு உளுத்தம் பருப்பு போட்டு தாளித்து வைத்தான். ஒரு நாள் ஞாயிற்றுக்கிழமை உன் தந்தை அவனிடம் இன்று அகத்திக்கீரை சமையல் செய். அகத்திக் கீரை வயிற்றுப்புண்ணை ஆற்றும். உடம்புக்கு மிகவும் நல்லது" என்று கூறி சில்லரை இல்லாமையால் ஐந்து ரூபாய் நோட்டைக் கொடுத்து, "மார்க்கட்டில் போய் நல்ல இளம் அகத்திக்கீரையாக வாங்கி வா" என்று கட்டளை யிட்டுவிட்டு வெளியே போனர்.

அந்த மடையன் ஐந்து ரூபாயை எடுத்துக் கொண்டு மார்க்கட்டுக்குப் போனன். கிராமத்திலிருந்து பசுமையான அகத்திக்கீரை வண்டி வந்தது. அகத்திக்கீரை அரையணுவுக்கு வாங்கினல் சமையலுக்குப் போதும். அவன் வண்டிகாரனைப் பார்த்து "ஐயா இந்தக் கீரை என்ன விலை?" என்று கேட்டான். அவன் ஐந்து ரூபாய் என்றான். "நல்லது வண்டியை ஓட்டு" என்று அவனிடம் ஐந்து ரூபாயைக் கொடுத்து வீட்டில் கம்பி போட்ட திண்ணையில் வண்டிக் கீரையையும்

இறக்கினுன். வண்டிக்காரன் சீக்கிரம் விற்றது என்ற மனநிறைவுடன் சென்ருன். சமையல்காரன் இத்தனை கீரையையும் சமைக்கப் பெரிய ஏனம்வேணுமே யென்று யோசித்துக் கொண்டிருந்தான். நான் மேல் மாடியில் வழிபாடு செய்து கொண்டிருந்தேன்.

திடீர் என்று உங்கள் அப்பா வீட்டுக்கு வந்தார். கீரை மலையைப் பார்த்தார். சமையல்காரனை அழைத்து இது என்ன? என்று கேட்டார். "எஜமான், தாங்கள் கூறியபடி ஐந்து ரூபாய்க்கு அகத்திக்கீரை வாங்கி வந்தேன். போதுந்தானே?" என்ருன். "அட மடையா! ஐந்து ரூபாய்க்குமா வாங்குவது? உனக்கு அறிவிருக்கின்றதா? ஏண்டா அரையணுவுக்குக் கீரை வாங்கினுல் போதுமே? புத்தியில்லாத உன்னை நான் வேலைக்கு வைத்துக் கொண்டேனே?" என்று தன்னைத்தானே நொந்து கொண்டார். தெருவில் மாடுகளுக்குத் தந்து பாழாய்ப் போவதைப் பசுவுக்குத் தந்தோம் என்று திருப்தியடைந்தார். இப்படி தினம் ஏதாவது ஒரு பிழை புரிவான். உன் அப்பா அத்தனையும் பொறுத்துக் கொள்ளுவார். அவனுக்கு 3 வேளை சோறு போட்டு மாதம் 5 ரூபாய் சம்பளம் தருவார்.

அவன் தன் தாயாரிடம் "அம்மா! ஊரில் மற்ற சமையல்காரர் கட்கு மாதம் சம்பளம் 30, 40 என்று கிடைக்கின்றதே. எனக்கு மட்டும் 5 ரூபாய்தான் தருகின்ருர். என் செய்வது?" என்ருன்.

கிழவி "மகனே! நீ கவலைப்படாதே. படிப்படியாகத்தானே சம்பளம் உயர்வு கிடைக்கும். உன் எஜமான் சந்தோஷமாகச் சிரிக்கின்ற சமயம் பார்த்து சம்பள வுயர்வு தாரும் என்று நயமாகக் கேள். அவர் உயர்த்தித் தருவார்" என்ருள். இந்த வுபதேசத்தைக் கேட்ட அவன் நல்லது என்ருன்.

ஒருநாள் அப்பாவுக்கு அன்னம் பரிமாறிக் கொண்டிருந்தான். ரசத்தை அதிகம் இலையில் விட்டான். அது இலையைத் தாண்டி ஓடியது. "ஏய்! முட்டாள்! நிதானமாக ரசம் விடவேண்டாமா? ஒரு சாம்பல் படையைக் கொணர்ந்து ஓடுகின்ற ரசத்திடம் வை" என்ருர். ஒரு படை சாம்பலைக் கொணர்ந்து வைத்தான், அது ரசத்தை உரிந்துவிட்டது. அதனை அவன் பார்த்து வியந்தான். "ஆ! இன்று நாம் ஒரு புதிய விஷயத்தைத் தெரிந்து கொண்டோம். தண்ணீரை உரிஞ்சுகின்ற சக்தி சாம்பலிடம் இருக்கின்றது. இது ஒரு பெரிய சக்தி என்று நினைத்துக் கொண்டான்.

மறுநாள் காற்படி அரிசியை உலையில் இட்டான். தண்ணீர் அதிகமாக வைத்துவிட்டான். சோறு வெந்துவிட்டது. அவன் "சரி. நீர் அதிகமாகவுளது: சரி, நமக்குத்தான் தண்ணீரை உரிஞ்சுகின்ற கருவி தெரியுமே. இது பற்றி என்ன கவலை?" என்று சிந்தித்து சோற்றுக்குமேல் ஐந்தாறு சாம்பல் படைகளை வைத்து அடுக்கினுன்.

உன் பிதா சாப்பிட வந்து அமர்ந்தார். அவன் அன்னப் பானை யைக் கொணர்ந்து அவருக்கு முன் வைத்து, சாம்பற் படையை ஒவ் வொன்ருக எடுத்தான். "ஏண்டா! இது என்ன?" என்று உன் பிதா கேட்டார்.

"முதலாளீ! நீங்கள் ஓடுகின்ற ரசத்தினிடம் சாம்பலை வைக்கச் சொன்னீரல்லவா? இன்று தங்கள் உபதேசப்படி, சாதத்தில் நீர் அதிகம் இருந்தது. அதனுல் சாம்பற் படையை அடுக்கிவைத்தேன்" என்ருன்.

அவனுடைய அறியாமையைக் கண்டு உன் பிதா சிரித்தார். உடனே அவன் அவர் அருகில் வந்து தலையைச் சொரிந்து கொண்டு நின்று, "முதலாளீ! சம்பளம் உயர்த்த வேண்டும்" என்ருன். சிரிக் கின்றபோது சம்பள வுயர்வு கேள் என்ற தாயின் மொழிப்படி கேட் டான். சம்பள வுயர்வு கேட்கின்ற நேரம் அதுவா? பிறகு நான் அதைப்பற்றிக் கூற விரும்பவில்லை.

பணியாளன் தன் தலைவனிடம் சமயம் பார்த்து நன்மை பெற வேண்டும் என்று இருக்குமாயின், நாமும் ஆலயத்தில் சமயம் பார்த் துத்தானே தெரிசிக்க வேண்டும். இப்போது சுவாமிக்கு அலங்கார சமயம். இது தெரிசனத்துக்கு ஏற்ற நேரம் அன்று; அலங்காரம் முடிந்தவுடன் ஆராதனை நிகழும். ஒவ்வொரு ஆராதனைக்கும் ஒவ் வொரு காரணம் உண்டு. இறைவன் அகரம் முதலாக, க்ஷகரம் முடிவாக 51 அக்ஷர வடிவாக விளங்குகின்ருன். அதனுல் அடுக் காலத்தி என்ற அக்ஷர தீபத்தைக் காட்டுவார்கள். இருபத்தேழு நட்சத்திர வடிவாக இறைவன் விளங்குகின்ருன் என்பதை யுணர்த் தும்பொருட்டு நட்சத்திர தீபங்காட்டுவார்கள். ஈசானுதி ஐந்து மந்திர வடிவாக இறைவன் விளங்குகின்ருன் என்பதனை அறிவிக்க ஐந்து தட்டுக்களின் தீபத்தைக் காட்டுவார்கள். கட்டை துணி முதலியவை களைக் கொளுத்திஞல் முடிவில் கரி சாம்பல் நிற்கும். கற்பூரத்தைக் கொளுத்திஞல் கரியோ சாம்பலோ நிற்பதில்லை. சூட்டம் தீயில் கரைந்து மறைந்துவிடுகின்றது, சீவன் சிவத்தில் ஒன்றுபடவேண்டும் என்ற உண்மையை நாம் உணரும் பொருட்டு கற்பூர தீபம் காட்டு வார்கள். கோயிலுக்கு வருபவர் இந்த வுண்மைகளை யெல்லாம் அறிந்து இறை வழிபாடு செய்தல் வேண்டும்" என்று தன் புதல்விக்கு சாலம்மாள் தெளிவாகக் கூறினுள், அதற்குள் கோயில் கண்டாமணி முழங்கியது. ஆராதனை செய்யத் தொடங்கினுர்கள். சாலம்மாள் தன் புதல்வி மணிமொழியுடன் தெரிசித்தாள். முருகன் கருணைப் பிர சாதத்துடன், திருநீற்றுப் பிரசாதமும் பெற்றுத் திரும்பினுள்.

மணிமொழி தாயார் கூறிய அறவுரைகளைக் கேட்டு அகமிக மகிழ்ந்தாள், காலம் பார்த்து கடவுளை வழிபட வேண்டும் என்ற கருத்தைக் கருத்தில் உணர்ந்தாள்.

உ

முருகா.

# திருப்புகழ்

---

ஒரு வீட்டுக்கு அதனைப்புதுக்கியோன் பேர் சூட்டுவான். "பங்கஜ நிலையம்" "அன்பு நிலையம்" "குமாரபவனம்" "முருகனில்லம்" என்றெல்லாம் அழகு பெறப் பெயரிடுவார்கள்.

இதுபோல் ஒரு நூல் செய்தவர்தான் அந்த நூலுக்குப் பேரிடுவார். இதுதான் எங்கும் என்றும் வழக்கம்.

ஆனால் இதற்குப் புறநடையாக, அருணகிரியார் பாடியருளிய பாடல்களுக்கு முருகனே திருப்புகழ் என்று பேர் சூட்டினார்; இல்லை. பாடு முன்னரேயே "திருப்புகழ் பாடு" என்று கட்டளையிட்டார். இக்கருத்தை,

"திருப்புகழ் விருப்பமொடு செப்பென
எனக் கருள்கை மறவேனே"

என்று அருணகிரிநாதரே கூறுகின்றார்.

சிவபெருமான் சுந்தரரைப் பார்த்து "சொற்றமிழ் பாடுக" என்றுதான் கூறினார். முருகன் "தமிழ் பாடுக" என்று கூறினாரில்லை. "திருப்புகழ் பாடுக" என்றே கூறியருளினார். இதனால் திருப்புகழின் உயர்வு நன்கு தெரிகின்றதல்லவா?

திருவண்ணாமலையில் அருணகிரியாரைத் திருப்புகழ் பாடுக என்று கட்டளையிட்டு வாக்கு வன்மை தந்த கந்தவேள், வயலூரில் திருப்புகழைப் பாடும் தன்மையும் ஊக்கமும் அன்பும் தந்தருளினார்.

"பாத பங்கய முற்றிட உட்கொண்
டோது கின்ற திருப்புகழ் நித்தம்
பாடு மன்பது செய்ப்பதி யில்தந் தவனீயே"

என்று அருணகிரிப் பெருமான் கூறுவதால் அறிக. பல பிறவிகளில் செய்த புண்ணியம் இருந்தால்தான் ஒருவனுக்குத் திருப்புகழில் பற்று வரும்.

திருப்புகழ் என்பது முருகப்பெருமானுடைய திருமார்பில் ஞான வொளிவீச விளங்கும் மதாணியாக விளங்குகின்றது.

"உரைபெற வகுத்தருணை நகரிலொரு பத்தனிடும்
ஒளிவனர் திருப்புகழ் மதாணிக் காரனும்" —திருவகுப்பு.

உ

முருகா

# மகாபாரதம்

---

## சாந்தி பர்வம்

## மோக்ஷ தர்மம்

*(264-ஆம் பக்கத் தொடர்ச்சி)*

யுதிஷ்டிரர், "பிதாமகரே! தருமம் என்பது எது? தருமம் இவ்வுலகில் பயனுடையதா? அல்லது பரலோகத்தில் பயனுடையதா? இரு உலகங்களிலும் பயனுடையதா? இதைச் சொல்லும்" என்று கேட்டார். பீஷ்மர் கூறுவாராயினர்.

### தரும லட்சணம்

"தருமநந்தன? சதாசாரம், ஸ்மிருதி, வேதம் இம்மூன்றும் தருமத்தில் பிரமாணம். விதியில் சொல்லப்படாத கருமங்கள் களர் நிலத்தில் விதைத்த விதைகள் போன்றவை. தருமம் மண்ணுலகிலும் விண்ணுலகிலும் சுகத்தைத் தருகின்றது. பாவிகளுக்குத் தருமத்தில் பற்று உண்டாவதில்லை. சத்தியம் ஒன்றே நித்தியம், பாவம் புரிந்தவன் அதை உண்மையாக ஒளியாமல் வெளியிடுவானாகில் அவன் பாவத்திலிருந்து விடுபடுகின்றான். உண்மை நெறி நின்றவன் எங்கும் என்றும் அச்சமின்றி வாழ்வான். தனக்கு விருப்பமில்லாத ஒன்றைப் பிறருக்குச் செய்யக்கூடாது, தன் மனைவியை மற்றொருவன் விரும்பினால் எத்துணைச் சீற்றமடைகின்றான்? ஆகவே அடுத்தவனுடைய

---

திருமுருகன் திருமார்பில் திகழும் கடப்பமலர் மாலைக்குத் திருப்புகழ்ப் பாடல்கள் பன்னீராக அமைந்து மணங்கமழ்கின்றது.

"பலபல பைம்பொன் பதக்க மாரமும்
அடிமை சொலுஞ்சொல் தமிழ்ப்ப னீரொடு
பரிமள மிஞ்சக் கடப்ப மாலையும் அணிவோனே"

என்ற திருப்புகழ் வாக்கால் இதனை யுணர்க.

இத்தகைய தெய்வத் திருமறையை இடையறாது எப்போதுந் தப்பாது ஓதி ஓதி உணர்ந்து உருகி உருகி வழிபாடு செய்து உய்வோமாக.

மனைவியை விரும்புதல் கூடாது. தனக்கு விருப்பமானதைப் பிறருக்குஞ் செய்யவேண்டும்.

### துலாதாரன்

ஒரு வரலாற்றைக் கூறுகின்றேன் கேள். ஒருவனத்தில் ஜாஜலியென்ற வேதியர் இருந்தார். இவர் கடற்பிரதேசத்தில் வசித்தார், கடுந்தவம் புரிந்தார். அவர் மழைக்காலத்தில் வெட்ட வெளியிலும். பனிக்காலத்தில் நீரிலும், வேனிற் காலத்தில் வெயிலிலும் நின்று தவஞ்செய்தார். மழையில் நனைந்து அவருடைய தலைமயிர் ஜடையாயிற்று. காற்றைமட்டும் பருகிக்கொண்டு கட்டைபோல் நின்றார். ஆணும் பெண்ணுமான இரு குருவிகள் சேர்ந்து அவருடைய தலையில் புல்லாலும் சணலாலும் கூடுகட்டின. அதில் முட்டையிட்டுக் குஞ்சுகள் பொரித்தன. முனிவர் இதனையறிந்தார். அசைந்தால் குருவிகட்கு இடையூறு உண்டாகும் என்று கருதி அசையாமல் இருந்தார். குருவிகள் பகலில் பறந்து செல்லும்; இரவில் அவர் தலையில் வந்து தங்கும். குஞ்சுகட்குச் சிறகுகள் முளைத்துப் பறந்தன. அவைகள் பறந்துபோய் மாலையில் வந்து தங்கலாயின. அவர் அவைகளின் நன்மையைக் கருதி அசைவற்றிருந்தனர். சில சமயம் பட்சிகள் நாலைந்து தினங்கள் பொறுத்தும் வந்தன. பிறகு ஒருமாதம் வரா திருந்தன.

ஜாஜலிக்கு மனத்தில் கர்வம் உண்டாயிற்று; "சித்தனானேன்; நான் பெருந்தவமுடையேன்" என்று கூறித் தோள் தட்டினார்; "ஏ ஜாஜலியே! காசியில் உள்ள துலாதாரனுக்கு நீர் நிகராகமாட்டீர்" என்று கனீர் என்று வானொலி உண்டாயிற்று.ஜாஜலி ஆச்சரியமடைந்தார். துலாதாரனிடம் பொறாமை கொண்டார். என்னைவிட அவன் சிறந்தவனா? தலையில் பறவைகள் கூடுகட்டி முட்டையிட்டுக் குஞ்சு பொரித்தும் நான் அசைவின்றித் தவஞ்செய்தேன். என்னை விட துலாதாரன் உயர்ந்தவனாவது எப்படி? அவனைக் காணவேண்டும்" என்று எண்ணிப் புறப்பட்டார். பலநாள் நடந்து காசிமா நகரையடைந்தார். அங்கே துலாக்கோலைப் பிடித்து வியாபாரஞ் செய்து கொண்டிருந்த துலாதாரனைப் பார்த்தார். அவன் எழுந்து ஜாஜலியை வரவேற்று வணங்கினான்.

"அந்தணரே! உமக்கு நல்வரவு. நீர் தவஞ்செய்ததையும், தலையில் பறவைகள் கூடுகட்டி வாழ்ந்ததும், நீர் தருக்குற்றதும், வானொலி எழுந்ததும் ஆகிய அனைத்தையும் நான் அறிந்தேன். உமக்கு என்ன விருப்பத்தை நான் செய்யவேண்டும்? சொல்லும்" என்றான்.

ஜாஜலி "அறிவுள்ளவனே! பண்டங்களை விற்று வாழ்கின்ற உனக்கு இந்த ஞானம் எப்படி உண்டாயிற்று? உன்னுடைய ஞானம் மிகவும் போற்றத் தக்கது" என்று கேட்டார்.

துலாதாரன் "ஜாஜலியே! தருமத்தின் நுட்பத்தை நான் நன்கு அறிந்திருக்கின்றேன். மயக்கந்தரும் கள்ளைத் தவிர, பிறபொருள் களைக் கபடம் இன்றி விற்கின்றேன். நான் யாரையும் பகைக்கின்ற தில்லை. எல்லோரிடத்திலும் விருப்பு வெறுப்பின்றி சமமாக இருக் கின்றேன். யாரையும் புகழ்வதுமில்லை; இகழ்வதுமில்லை நான் பொன்னையும் மண்ணையும் ஒன்றுபோல் பார்க்கின்றேன். எனக்கு பொன்னிலும் புகழிலும் ஒரு சிறிதும் விருப்பம் இல்லை. எந்த உயிர் களுக்கும் என்னால் பயம் இல்லை. அவைகளால் எனக்கும் பயம் விளைவதில்லை. நதியில் மிதந்துவரும் ஒரு கட்டை மற்றொரு கட்டை யுடன் சேர்க்கை யடைவதுபோல் இந்த உலகில் மனைவி மக்களின் சேர்க்கை யேற்படுகின்றது. கட்டை பிரிந்துபோவதுபோல் உற வினர் பிரிவும் ஏற்படுகின்றது. கட்டைக்கு சேரும்போது மகிழ்ச்சி யும் பிரியும்போது கவலையும் ஏற்படுவதில்லை. அதுபோல் நான் இருக்கின்றேன்.

உயிர்களுக்குத் துன்பஞ் செய்யாத தருமத்திலும் மேலான தவமோ யாகமோ இல்லை. எருதுகளை மூக்கைத் துளைத்துக் கயிறு போட்டு இடர்ப்படுத்தி உழுவதையும், மாட்டை அடிப்பதையும் நான் விரும்பவில்லை. மாடுகளை கொசுவும் சகதியுமுள்ள இடத்தில் கட்டித் துன்பத்தைச் செய்கின்றார்கள். கலப்பையால் உழுகின்ற போது எத்தனை உயிர்கள் மாளுகின்றன! ஆதலால் அதுவும் பாவ மான தொழில். இதை நான் அறமெனக் கருதேன்" என்றான்.

ஜாஜலி "துலாதாரனே? உழுவதை நீ அறம் எனக்கொள்ள மறுக்கின்றாய்? உழவில்லையானால் தானியங்கள் எப்படி விளையும். விளையவில்லையானால் மக்கள் எப்படி வாழ்வார்கள்? நீ உழவை மறுப் பதும் வெறுப்பதும் சரியென்று நான் நினைக்கவில்லை" என்றார்.

துலாதாரன் "அந்தணரே! மக்கள் உத்தமமான அறநெறியில் நின்றால் பூமி உழப்படாமலேயே விளைவைத் தரும். பசுக்கள் தாமே கறக்கும். ஆதலால் எக்காலத்தும் எந்த இடத்திலும் எவ்வுயிர்கட் கும் இம்சையில்லாத தருமமே சிறந்த தருமம்" என்றான். ஜாஜலி கேட்டு மகிழ்ந்தார். பின்னர் இருவரும் பரகதியடைந்தார்கள்" என்று கூறினார்.

தருமர் "பிதாமகரே! காரியங்களை விரைவாகச் செய்வது நல் லதா? தாமதித்துச் செய்வது நல்லதா! இதனை எனக்கு விளக்கவேண் டும்" என்று வினவினார்.

## சிரகாரி வரலாறு

பீஷ்மர், "மன்னவனே! இதைப்பற்றி ஒரு வரலாற்றைக் கூறு கின்றேன். கௌதம முனிவருக்குப் பல புதல்வர்கள் பிறந்தார்கள்.

சிரகாரி என்பவர் இளைய புதல்வர். அவர் எதனையும் நிதானமாகச் சிந்தித்துச் செய்வார். நெடுநேரம் சிந்திப்பார். நெடுநேரம் தூங்காமல் இருப்பார். நன்கு ஆராய்வார். இதனால் அவர் சிரகாரி எனப் பேர் பெற்றார். இவரை அறிவற்றவர்கள் சோம்பேறி என்று ஏளனஞ் செய்தார்கள்.

ஒரு சமயம், அவருடைய அன்னையாகிய அகலிகையை இந்திரன் கௌதமர் வடிவில் வந்து மருவினான், அதனால் வியபிசாரமாகிய குற்றம் அடைந்தாள். அதனால் சீற்றம் அடைந்த கௌதமர் சிரகாரியைப்பார்த்து "மகனே தாயாரைக்கொல்" என்று கட்டளையிட்டு வனத்திற்குச் சென்றார்.

சிரகாரி சிந்திப்பாராயினார். "நான் தந்தையின் கட்டளையை எப்படிச் செய்வேன்? தாயைக் கொல்வது பாவமாயிற்றே? இந்தக் கொடுமையை எவ்வாறு செய்வேன்! தந்தை சொல் மிக்க மந்திரம் இல்லை. பிதா வார்த்தையை நிறைவேற்றுவது தருமம். அதே சமயத்தில் தாயைக் காப்பதும் சிறந்த தருமம் எனக்கு இப்படி ஒரு தருமசங்கடம் வந்துளதே? இருதலைக்கொள்ளி எறும்பாக நிற்கின்றேன்; தந்தை சொல்லைத் தட்டினால் பாவம்: தாயை அதிலும் பெண்ணைக் கொல்வதும் பாவம். எனக்கு அறிவைத் தருகின்றவர் தந்தை. அவரே குரு. அவர் சொல்லை மறுப்பது கூடாது. பிதாவைப் பார்க்கினும் பெரியவர் எனக்குப் பதினான்கு உலகங்களிலும் இல்லை. பிதா மகிழ்ந்தால் எல்லாத் தேவதைகளும் மகிழ்வார்கள்.

இனி தாயைக் காட்டிலும் பெரிய தெய்வம் கிடையாது, பத்து மாதம் சுமந்து பெற்றவள். பாலூட்டித் தாலாட்டி வளர்த்தவள் தாய். தாயிற் சிறந்ததொரு கோயிலும் இல்லை. "அம்மா" என்று அழைத்துக்கொண்டு வீட்டிற்குள் புகுகின்றவன் துன்பத்தையடைவதில்லை. தாய் இருக்கின்றவரை கிழத்தனம் எய்தாது. தாயுள்ளவரை அவன் குழந்தை போன்றவனேயாகும். தாய் மாய்ந்த பிறகே ஒருவன் கிழவனாகின்றான். தாய் இல்லாதவனுக்கு உலகமே பாழாகின்றது: தாய் மிகப் பெரியவள். இந்திரன் கணவனுடைய வடிவில் வந்ததனால் தாய் கணவன் என்று கருதி அவனை மருவினாள். இது அன்னை மனமறிந்து செய்த குற்றம் ஆகாது. அந்தோ? நான் என்ன செய்வேன்? தந்தை சொல்லைத் தட்டினால் குற்றம்! தாயைக் கொல்லுவது அதனினும் பெரிய குற்றம்...இப்போது எது தக்கது?..." என்று இவ்வாறு நீண்டகாலம் சிந்தித்துக் கொண்டேயிருந்தார்.

வனம் புகுந்த கௌதமர் சினம் ஆறி மனைவி மீது பச்சாத்தாபம் அடைந்தார். அவள் மீது குற்றம் இல்லை என்று உணர்ந்தார். வெகுகாலம் என்னுடன் ஒத்து உழைத்த மனைவியைக் கொல்லச் சொன்னேனே? அவன் கொன்றிருப்பானோ? கொல்லாமல் இருப்பானாயின்

நல்லதாக இருக்கும்'' என்று எண்ணினர்......மிகுந்த கவலையுடன் வீட்டிற்கு வந்தார். மகன் ஆயுதத்தை எறிந்து பிதாவுடைய திருவடியில் வணங்கினர். மகனுடைய நிதான புத்தியைக்கண்டு அகமகிழ்ந்தார் கௌதமர். ''தாமதித்துச் சிந்தித்து ஒரு காரியம் செய்பவனுடைய பெருமை கடலினும் பெரிது'' என்றுகூறி அவனே வாழ்த்தினர்.

மனேவிக்கு அருள் புரிந்தார். பிறகு தவஞ்செய்து நற்கதியடைந்தார். ஆதலால் சிந்தித்துச் செயல் புரிவதுவே பெருமை தரும்'' என்முர்.

யுதிஷ்டிரர் ''பிதாமகரே! அரசனுனவன் துன்புறுத்தாமல் எப்படி குடிகளேக் காப்பான்? இதைச் சொல்லும்'' என்று கேட்டார்.

## சத்தியவான்—கொலே கூடாது

பீஷ்மர், ''தருமனே! இதுபற்றி சத்தியவான் தன் தந்தையான தியுமத்சேனனிடம் கூறியதைக் கேள்.

தியுமத்சேனன் குற்றஞ் செய்தவர்களுக்கு மரண தண்டனே விதித்தான். அரசனுடைய ஆணையின்படி கொலேக்கூடத்துக்கு அழைத்துப் போவதைப்பார்த்த சத்தியவான், தன் பிதாவைப் பார்த்து ''தந்தையே! தருமம் அதருமமாகும்; அதருமமும் தருமமாகும். குற்றவாளிகளேக் கொலே செய்வது தருமம் ஆகாது. கொலே கூடாது'' என்முன்.

தியுமத்சேனன் ''சத்தியவானே! குற்றஞ்செய்தவர்களே—திருடர்களேக் கொலே செய்யாவிட்டால் நாட்டில் அதருமம் பரவிவிடும். பயிர் செய்பவன் களேபறிப்பதுபோல் அரசன் பாவிகளே மரண தண்டனேயால் களேயவேண்டும். அப்போதுதான் சாதுக்கள் அச்சமின்றி வாழ்வார்கள். ஆகவே கொலேபுரிவது பாவம் என்முல் அரசாட்சியை எவ்வாறு நடாத்துவது?'' என்முன்.

சத்தியவான் ''பிதாவே! குற்றஞ் செய்தவனுக்கு சிறைத் தண்டனே; அங்கபங்கம், முதலிய தண்டனே விதிப்பதே முறை. கொலேத் தண்டனே கூடாது. குற்றஞ் செய்தவன் காலக்கிரமத்தால் திருந்தி நல்லவனுகக் கூடுந்தானே அவனேக் கொலே செய்வதால் அவனுடைய மனேவி மக்கள் ஆதரவற்று அல்லல்படுகின்றனர். தண்டனே முதலில் ''சீ'' என்ற இகழ்ச்சிச் சொல்லாலேயே நடைபெற்றது. பின்னர் பொருளே வாங்குதல், சிறைப்படுத்துதல் முதலிய தண்டனேகள் வந்தன. நல்ல பிரசாரங்கள் மூலம் மக்களே நல்வழிப்படுத்த வேண்டும். தன் நாட்டில் திருடர்கள் முதலிய குற்றவாளிகள் இருப்பது பற்றி அரசன் நாணுதல் வேண்டும். கொலே கொடியது'' என்முன்.

## பசுவைக் கொல்லாமல் யாகம் செய்யவேண்டும் என்று கபிலர் கூறியது

தருமர் "பாட்டனரே! இல்லறத்தில் இம்சை நேர்கின்றது. துறவறத்தில் அது இல்லை. இதில் எது உயர்ந்தது?" என்று கேட்டார்.

பீஷ்மர் "மகனே! இல்லறந் துறவறம் என்ற இரண்டும் உயர்ந்த பயனை அளிப்பவைகள். இரண்டும் ஆன்றோர்களால் அநுசரிக்கப்பட்டிருக்கின்றன.

நகுஷன் வேள்வியில் கொலைசெய்ய பசுவை நிறுத்தினன். கருணை மிகுந்த கபிலர் அங்குவந்து தடுத்தார். "வேதங்களே!" என்று தணிந்த குரலில் ஒருமுறை கூறினர். ஸ்யூமரச்மி என்ற முனிவர் பசுவினுள் புகுந்து பேசுவாரானர். "கபில முனிவரே! ஆச்சரியம்! வேதங்கள் நிந்திக்கப்படுமானல் ஏனைய தருமங்கள் எதனல் ஒப்புக்கொள்ளப்படும்? வேதம் ஈசுவரனுடைய வாக்கல்லவா?" யாகம் செய்பவன் இகமும் பரமும் அடைகின்றான்" என்றார்.

கபிலர் "நான் வேதங்களை இகழவில்லை. விஷமமாகவும் பேசவில்லை. வேதத்தில் கர்மகாண்டத்தில் யாகம் கூறப்பட்டுள்ளது. அது சுவர்காதி புண்ணிய உலகங்களைமட்டுந் தரவல்லது. யாகத்தி உ. கொலை செய்வது முத்திநெறியாகாது. அகிம்சை ஒன்றே முத்திநெறியாகும். உத்தமன் தன் பொறிபுலன்களை வென்று நல்லொழுக்கத்தில் நிற்பான். கோள் சொல்லக்கூடாது. கடுஞ்சொல் கூறக்கூடாது. மிதமான பேச்சு, மிதமான உணவு, நாவடக்கம் உடையவனுக இருக்கவேண்டும். உயிர் வாழ்வதற்காகவே உண்ணவேண்டும். பிறன் மனைவியரை விரும்பக்கூடாது. ருது காலத்தில் மட்டும் மனைவியை மருவவேண்டும். பத்தினி விரதமுடையவளாக இருக்கவேண்டும். இப்படி வாழ்பவனுக்கு தவம் ஏன்? யாகம் ஏன்?

விரிப்பின்றி வெறுந்தரையில் கையையே அணையாகக் கொண்டு படுப்பவன் எவனே அவனையே பிராம்மணன் என்று தேவர்கள் நினைக்கின்றார்கள். வெப்பத்தையும் தட்பத்தையும் சமமாகக் கருதி இன்ப துன்பம் முதலிய இரட்டைகளை ஒன்றாக எண்ணியிருப்பவனே அந்தணனுவான். எவனல் மற்ற உயிர்களுக்குப் பயமில்லையோ அவனுக்கு மற்ற உயிர்களால் பயம் நேராது. மன்னுயிர்களைத் தன்னுயிராக நினைப்பவனே அந்தணன்'' என்றார்.

''கபில முனிவரே! நான் ஸ்யூமரச்மி. தாங்கள் சிறந்த அறிஞர். எல்லாந் தெரிந்தவர். எனக்கு உபதேசியுங்கள். இல்லறம் பெரிதா? துறவறம் பெரிதா? எதில் அதிக பயன்?" என்று வினவினர்.

கபிலர் "வேதியரே! ஜனகர், யாக்ஞவல்கியர் போன்றவர்கள் இல்லறத்தார்கள்தான். அவர்களைப்போல் இருந்தால் இல்லறமும் சிறந்ததுதான். விருப்பு வெறுப்பற்ற துறவறமும் சிறந்ததுதான். ஞானந்தான் இரண்டிற்கும் முக்கியமாகும் என்றார்.

## அறமே சிறந்தது—குண்டதாரன் கதை

யுதிஷ்டிரர் "பிதாமகரே! அறம்பொருள் இன்பம் என்ற மூன்றிலே எது சிறந்தது?" என்று கேட்டார். பீஷ்மர் கூறுகின்றார்.

வனத்தில் ஒருவேதியர் இருந்தார். அவர் வறியவர். ஆசையால் பொருளை விரும்பினர். யாகத்திற்காகப் பொருளை விரும்பி உக்கிரமான தவஞ்செய்தார். தேவதைகளை ஆராதித்தார். தனத்தையடைந்தாரில்லை. மிகவும் துயரமடைந்தார். "எனக்கு அருள்புரியும் தெய்வம் எது!" என்று சிந்தித்தார். அங்கு குண்டதாரன் என்ற மேகத்தைப் பார்த்தார். இவன் எனக்கு நன்மை செய்வான் என்று எண்ணினர். அம்மேக தேவதையை தூபதீபங்களாலும் நறுமலர்களினுலும் பூசித்தார்.

அம்மேகதேவன் மகிழ்ச்சியடைந்தான். பிரம்மஹத்தி செய்தவனுக்கும், மதுபானஞ் செய்தவனுக்கும், களவு செய்தவனுக்கும், விரதத்தை விட்டவனுக்கும் பெரியோர்களால் பரிகாரம் விதிக்கப்பட்டிருக்கின்றது. செய்த நன்றி மறந்தவனுக்குப் பரிகாரம் விதிக்கப்படவில்லை. அதருமம் ஆசையின் புதல்வன்; குரோதம் அசூயையின் புதல்வன்; உலோபம் வஞ்சனையின் புதல்வன். நன்றி மறக்கக்கூடாது. நீர் செய்த உபசாரத்தால் மகிழ்கின்றேன். உனக்கு நன்மை செய்வேன்" என்றான். குண்டதாரன் மாணிபத்ரன் என்ற தேவனைத் தொழுதான். இந்த அந்தணர் எனது பக்தர். இவருக்கு சுகந்தரத்தக்க அருளைச் செய்யும்" என்று வேண்டினன்.

மாணிபத்ரன் "குண்டதாரா! இவ்வேதியர் எவ்வளவு தனத்தை விரும்புகின்றாரோ அவ்வளவு தனத்தையும் தேவர்களின் கட்டளையால் வழங்குவேன்" என்றான். குண்டதாரன் "பகவானே! தனம் அழியக்கூடியது. பதவி நிலையில்லாதது. ஆதலால் இவருக்குத் தருமத்தைத் தந்தருளுவீராக" என்று யாசித்தான். அவன் அதை அளித்தான். பிராம்மணர் தருமத்தைக் கடைப்பிடித்துத் தவஞ் செய்தார். காய்கனி கிழங்குகளைச் சிலகாலம் உண்டார். பிறகு அவைகளை விடுத்துச் சருகுகளைத்தின்று தவஞ்செய்தார். பின்னர் அதனையும் விடுத்து காற்றைப் புசித்தார். அவருடைய உடல் இளைக்கவில்லை. அவருக்கு முக்காலமும் உணரும் ஞானம் உதயமாயிற்று. குண்டதாரன் அவர்முன் தோன்றி "ஓ அந்தணரே! உமது அறிவுக் கண்ணால் அரசர்களுடைய கதியையும் உலகங்களையும் பார்"

# உலாவந்த பெருமான்

## திரு. கி. வா. ஜகந்நாத ஐயர் அவர்கள்

உயிர்களுக்கு அருள் செய்யும் பொருட்டு இறைவன் குணம் குறி கடந்த நிலைமையை நீத்து உருவமும் பெயரும் உடையவனுக எழுந்தருளுகிருன். எந்தக் காலத்திலும் தன்னை வந்து வழிபடுகிறவர்களுக்குப் பயன் தரும்பொருட்டு அங்கங்கே ஆலயங்களின் மூர்த்திகளாக எழுந்தருளியிருக்கிருன்.

பழங்காலம் முதற்கொண்டே கோயில்களில் பூசை முதலியன நடந்து வருகின்றன. மக்கள் கூட்டம் கூட்டமாகப் போய் எம்பெருமானுடைய தரிசனத்தைக் கண்டு மன அமைதியை அடைகிருர்கள். உலகியல்பிலே ஈடுபட்டு அதனுல் உண்டாகின்ற கவலைகளை மறப்பதற்கு இறைவனுடைய நினைவு கொள்வதைத் தவிர, வேறு போக்கு இல்லை. எத்தனைக் கெத்தனை மனிதன் கல்வி, செல்வம், ஆற்றல் முதலியவைகளால் சிறந்து இருக்கின்ருனே, அத்தனைக் கத்தனை அவனுக்குக் கவலைகளும் துன்பங்களும் உண்டாகின்றன. புற வாழ்வில் விரிவு அடைய அடைய அவனுடைய துன்பங்களும் விரிவடைகின்

---

என்ருன். வேதியர் "செல்வத்துடன் வாழ்ந்த அநேக அரசர்கள் நரகில் இருப்பதை ஞானக்கண்ணுல் பார்த்தார்.

குண்டதாரன் "வேதியரே! இப்போது சிந்தியும். செல்வத்தாலும் ஆசையாலும் பயன் இல்லை. அதனுல்தான் உனக்குத் தனத்தை நான் தரவில்லை. நீ அறத்தால் நன்மை யடைந்தீர். இன்னும் எப்போதும் அறத்தைக் கடைப்பிடித்து உறுதியுடன் இரும்" என்று கூறி மறைந்தான். அந்த அந்தணர் அறத்தைக் கடைப்பிடித்துத் தவஞ் செய்து எல்லாவுலகங்களிலும் உலாவினர். அவருக்கு சகல சித்திகளும் உண்டாயின. யுதிஷ்டிர! அதனுல் தேவர்களும் யட்சர்களும் தருமவான்களையே பூசிக்கின்ருர்கள். தனவந்தர்களையும் காமிகளையும் பூசிப்பதில்லை. உன்னுடைய புத்தி தருமத்தில் பற்றி யிருப்பதனுல் உன்னிடத்தில் தேவர்கள் மிகவும் அருளுடையவர்களாக இருக்கின்ருர்கள். தனத்தில் அணுவளவுதான் சுகம் உளது. தருமத்தில் பெரிய சுகம் இருக்கின்றது. ஆதலால் பொருளைக் காட்டிலும் இன்பத்தைக் காட்டிலும் அறமே சிறந்தது" என்று கூறினர்.

(தொடரும்)

றன. ஆனல் அக வாழ்வில் புகுவதற்குரிய வழி என்ன என்பதைப் பலகாலமாகப் பெரியோர்கள் தேடிக் கொண்டே இருந்தார்கள்.

பாரத நாட்டில் இறைவனுடைய நினைவுபெற்று அவன்பால் பக்தி கொள்வதே அக வாழ்வு என்பதை அறிந்துகொண்டார்கள். மனதில் அமைதியைப் பெறுவதற்கு வழிகாட்டுவது இறைவனுடைய திருவருள். அவன் திருவருளைப் பெறுவதற்கு அவனை வணங்கவேண்டும். இறைவன் மனத்திற்கும் அப்பாற்பட்டவன். ஆனாலும் உலகத்திலுள்ள மக்கள் உய்வதற்காகத் திருக்கோயில்களிலே மூர்த்திகளாக எழுந்தருளியிருக்கிறன். அருளே கண்ணாகக் கண்டவர்களுக்குத் தன் திருவுருவத்தைக் தோற்றுவித்துப் பிறகும் அதை வணங்கும்படி ஆலயத்தில் எழுந்தருளியிருக்கிறன். அதனால்தான் இந்த நாட்டில் எங்கே பார்த்தாலும் கோயில்கள் இருக்கின்றன.

கோயில்களில் இறைவனுடைய பலவகைத் திருவுருவங்களை அமைத்திருக்கிறார்கள். தினந்தோறும் பூசை முதலியன நடத்துகிறார்கள். ஊரில் உள்ள அத்தனை பேரும் வந்து சார்ந்து இறைவனைப் பணியும்படியான அமைப்புக்கள் எல்லாம் கோயிலிலே இருக்கின்றன. அவர்கள் அமைதி பெற்று வாழ்வதற்குரிய இடமாகக் கோயில் விளங்குகிறது. அந்த அமைதி இல்லாதவர்கள் வாழ்க்கையில் இன்பத்தைக் காணமுடியாது. 'அதனால் கோயில் இல்லாத ஊரில் குடியிருக்க வேண்டாம்' என்று பெரியோர்கள் பேசுகிறார்கள்.

'திருக்கோயில் இல்லாத திருவில் ஊர்' என்று திருநாவுக்கரசர் சொல்லுகிறார். கோயிலில் எழுந்தருளியிருக்கிற இறைவனுக்குத் தினந்தோறும் நடைபெறும் பூசனைக்கு நித்தியம் என்று பெயர். நித்தியம் அல்லாமல் விசேஷ காலங்களில் நிகழும் திருவிழா முதலியவற்றிற்கு நைமித்திகம் என்று பெயர். மனத்துக்கு எட்டாத கடவுள் புறக்கண்ணுக்குத் தோற்றும் உருவத்தை எடுத்துக்கொண்டு திருக்கோயிலிலே எழுந்தருளியிருக்கிறன், அந்த மூர்த்தியைத் தரிசிக்க வேண்டுமானல் அவன் இருக்கும் கோயிலுக்குச் சென்று காணவேண்டும். அங்கே சென்று அவன் கோயிலை வலம் வரவேண்டும். ஓரளவு முயற்சி இருந்தால் ஒழிய வீட்டில் உள்ள மக்கள் கோயிலுக்குப் போக முடியாது. பக்தர்கள் எங்கெங்கே கோயில்கள் உண்டோ அங்கே எல்லாம் தேடிச்சென்று, எத்தனை தூரமாக இருந்தாலும் அதை அடைந்து, வலம் வந்து போற்றி வணங்குகிறார்கள். ஆனல் இறைவனைக் காணவேண்டும் என்ற ஆர்வம் இல்லாத மக்கள் அவனுடைய கோயில் மிக அருகில் இருந்தாலும் கூடப்போவது இல்லை. அத்தகைய சோம்பேறிகளை ஆட்கொள்வதற்குக்கூட இறைவனுடைய திருவருள் விரிகிறது.

தினந்தோறும் பூசை முதலியவற்றை ஏற்றுக்கொண்டு மூல மூர்த்தியாக எழுந்தருளியிருக்கிற ஆண்டவன் உற்சவ மூர்த்தியாக விசேஷ காலங்களில் வீதியில் எழுந்தருளுகிறான். அப்படி எழுந்தருளு வதற்கு உரிய விதிகளைப் பெரியோர்கள் அமைத்திருக்கிறார்கள். கோயிலிலே இருக்கிற மூர்த்தியைக் காட்டிலும் வெளியிலே உலாவரு கின்ற உற்சவமூர்த்தி மிகவும் அழகாக இருக்கும். விழாவில்தான் விசேஷ ஆடம்பரங்கள் எல்லாம் இருக்கும்: ஆடை அலங்காரம், வாத்தியம் முதலிய சிறப்புக்களை எல்லாம் திருவிழாக்களில் காண லாம். உற்சவ விக்கிரகமாக இறைவன் திருவீதியிலே எழுந்தருளும் போது காண்கின்றவர்கள் எல்லாம் அந்தக்காட்சியிலே மனம் லயித்து நிற்பார்கள். வாணவேடிக்கைகளைக் கண்டு இன்புறுகிறவர் பலர். சங்கிதம் முதலியவற்றைக் கேட்கின்றவர் பலர். இப்படியாக ஐந்து இந்திரியங்களுக்கும் இன்பத்தைத் தருகின்ற பல பொருள்களைக் கூட் டித் திருவிழாவை நடத்துகிறார்கள். மக்கள் பெருங்கூட்டமாக வந்து, இறைவனைத் தரிசிக்கும்பொழுது, அதில் ஈடுபடாதவர்கள்கூட மெல்ல மெல்லத் தம்முடைய வீட்டிலிருந்து வெளியே வந்து எட்டிப்பார்க் கும் அந்த முயற்சியே பின்பு திருவீதிக்கு வந்து கை குவித்துப் பார்க் கும்படியாகச் செய்யும்.

இப்படி மெல்ல மெல்ல வீட்டுக்குள்ளே இருக்கும் ஒருவனை வெளி யிலே இழுத்து, தன்னைப் பார்க்கும்படியாகச் செய்யும் பொருட்டு ஆண்டவன் திருவுலா வருகிறான். 'நீ என்னுடைய வீட்டுக்கு வரா விட்டாலும் நான் உன் வீட்டுக்கு வருகிறேன்' என்று கருணை மிகுதி யினாலேயே உலா வருகிறான். தன்னிடத்தில் வந்து அன்பு செய்வதற் குரிய மனம் படைக்காதவர்களுக்கு, உருகாத கல் மனத்தினர்களுக்கு, அவர்களுடைய வீட்டுக்குச் சென்று, 'நான் இதோ வந்திருக்கிறேன்' என்று தன்னுடைய உருவத்தைக் காட்டி, அவர்களுடைய மனத்தை உருக்குவதற்காகவே இந்த உலாக்கள் ஏற்பட்டிருக்கின்றன.

---

உ

## புதிய வெளியீடுகள்

1. கட்டுரைக் கனிகள்
பல ஆண்டுகளாக நமது திருப்புகழமிர்தத்தில் வெளிவந்துள்ள முக்கியமான 67 கட்டுரைகளின் தொகுப்பு. மிகவும் குறைந்த விலையில் வெளியிடப்பட்டுள்ளது. 420 பக்கங்கள் விலை ரூ. 3—00. பதிவு தபாற் செலவு ரூ. 1—30.

2. கற்புக் கனிகள்—முதற் புத்தகம்
கற்பு என்னும் தலைப்பின்கீழ் வெளிவந்த சிறுகதைகள் 21 கொண்ட தொகுப்பு விலை ரூ. 1—00. தபாற் செலவு 0—20

3. கற்புக் கனிகள்—இரண்டாம் புத்தகம்
கற்புக் கதைகள் 16 கொண்ட தொகுப்பு விலை ரூ. 1—00. தபாற் செலவு ரூ. 0—20

4. கற்புக் கனிகள்—மூன்றாவது புத்தகம் (11 சிறு கதைகள்) விலை ரூபாய் 1—00. தபாற்செலவு 0—20

5. கற்புக் கனிகள்—நான்காவது புத்தகம்
13 சிறு கதைகள் கொண்டது. விலை 1—00. தபாற் செலவு 0-20
2, 3, 4, 5க்கு ரிஜிஸ்டர் தபாற் கட்டணம் 0—95 வேறு.

6. மகாபாரதம்—வியாச பகவான் அருளிய பாரதத்தைத் தழுவிய வசனத்துடன், வில்லிபுத்தூரார் பாரதத்திலிருந்து 200 பாடல்கள் உரிய இடங்களில் விரவி வருவது. கிரௌன் ⅛ அளவில் 544 பக்கங்கள்—(மூன்றாவது பதிப்பு) விலை ரூ. 5—00. தபாற் செலவு ரூ. 1-25.

---